[சரணமித்யபி வாசமுதைரிரம்] ஏதேனு மொருபடியாக சரணமென்கிற வாக்கும் என்நாவில் வெளிவந்ததாயிற்று. [இதீதம் ஸஸாக்ஷிகயந்] எம்பெருமானாருடைய ப்ரபத்தியிலே நான் அந்தர்ப்பூதன் என்னுமிடத்தையும், என் வாக்கினாலும் சரணமென்று சொன்னேனென்னுமிடத்தையும் பிரமாணமாகக் கொண்டு என்றபடி. ஸஸாக்ஷிகமென்றும் ப்ராமாணிகமென்றும் பர்யாயம். [அத்ய மாம் தவ பரம் குரு] யத்கிஞ்சித் வ்யாஜமாத்ரப்ரதீக்ஷியான தேவரீர் இவ்வளவையே பற்றாசாகக் கொண்டு அடியேனை ரக்ஷ்யபூதனாகத் திருவுள்ளம்பற்றி யருளவேணும். (102)

अकारिषि—कर्मणि लुङुत्तमैकवचनरूपम्. .... ....

दयाऽन्येषां दुःखाप्रसहनमनन्योऽसि सकलैः दयालुस्त्वं नाथः प्रणमदपराधानविदुषः ।
क्षमा ते रङ्गेन्दो ! भवति न तरां नाथ ! न तमां तवौदार्यं यस्मात्तव विभवमर्थिस्वममथाः ॥ १०३ ॥

தயா ந்யேஷாம் து:க்காப்ரஸஹநமநந்யோஸி ஸகலை:
தயாளுஸ் த்வம் நாத: ப்ரணமதபராதாநவிதுஷ:,
க்ஷமா தே ரங்கேந்தோ! பவதி ந தராம் நாத! ந தமாம்
தவௌதார்யம் யஸ்மாத் தவ விபவமர்த்திஸ்வமமதா:. 103

| | |
|---|---|
| ரங்க இந்தோ | ஸ்ரீரங்கசந்திரனே! |
| தயா | தயையாவது |
| அந்யேஷாம் | பிறருடைய |
| து:க்க அப்ரஸஹநம் | துயரத்தை ஸஹித்திருக்க மாட்டாமையாகும்; |
| த்வம் | தேவரீரோ வென்னில் |
| ஸகலை: | எல்லாரோடும் |
| அநந்ய: அஸி | வேறுபடாதவராகஇராநின்றீர்; |
| அத: | ஆகலால் |
| தயாலு: ந | தயை யுடையீரல்லீர்; |
| ப்ரணமத் அபராதாந் | பக்கதர்களின் அபராதங்களை |
| அவிதுஷ: | அறியாதிருக்கின்ற |
| தே | தேவரீருக்கு |
| க்ஷமா | பொறுமையானது |
| ந பவதிதராம் | இருக்க ப்ரஸக்தியில்லை; |
| யஸ்மாத் | யாதொரு காரணத்தினால் |
| தவ | தேவரீருடைய |
| விபவம் | செல்வத்தை |
| அர்த்திஸ்வம் | யாசகர்களான பக்தர்களின் வொத்தாக |
| அமதா: | எண்ணியிருக்கின்றீரோ (அதனால்) |
| தவ | தேவரீருக்கு |
| ஔதார்யம் | உதாரத்வமானது |
| ந பவதிதமாம் | இருப்பதற்குச்சிறிதும் ப்ரஸக்தியில்லை. |

* * * [தயா ந்யேஷாம்] பெரிய பெரிமாளுடைய தயை, க்ஷமை, ஔதார்யம் என்கிற திருக்குணங்களை வ்யாஜஸ்துத்யலங்கார மர்யாதையாலே ஸ்தோத்ரம் பண்ணுகிறார். "व्यक्तिर्व्याजस्तुतिर्निन्दास्तुतिभ्यां स्तुतिनिन्दयो:" என்பது வ்யாஜஸ்துதியின் லக்ஷணம். ஆபாதப்ரதீதியில் நிந்தைபோல் தோற்றும்; அது ஸ்துதியாகவே பர்யவஸிக்கு மென்க. [அந்யேஷாம் து:க்காப்ரஸஹநம் தயா: த்வம்து ஸகலை: அநந்யோஸி; அத: த்வம் ந தயாலு:.] பிறருடைய துக்கங்கண்டு பொறுக்கமாட்டாமை தயை எனப்படுகிறது; பிறர் என்று சொல்லுவதற்கே விஷயமில்லையே. * सर्वं खल्विदं ब्रह्म, ऐतदात्म्यमिदं सर्वम् , तत्त्वमसि * இத்யாதி ச்ருதிகளின்படியே எல்லாரோடும் தேவரீர் அபிந்நராகவே யிருப்பதனால் அந்யபதார்த்தமே யில்லை; அத ஏவ அந்யேஷாம் து:க்காப்ரஸஹநமாகிற தயை தேவரீர் பக்கலில் இல்லையென்ன வேண்டியதாகிறது.

[ப்ரணமதபராதாந் அவிதுஷ: தே க்ஷமா நபவதிதராம்] அடியவர்களுடைய அபராதங்களைக் கண்டு தண்டிக்க நினைக்காமல் பொறுப்பது க்ஷமாகுண மெனப்படுகிறது. ஸஹஸ்ரநாமத்தில் "அவிஜ்ஞாதா" என்று சொன்னபடி ஆச்ரிதர்களின்

அபராதங்களைப்பற்றின உணர்ச்சியே யில்லாத தேவரீர்க்கு அபராதஜ்ஞாநாநந்தரபாவி யான பொறுமைக்கு ப்ரஸக்தி தானுமில்லையிறே.

[யஸ்மாத் தவ விபவம் அர்த்திஸ்வம் அமதாः (தஸ்மாத்) தவ ஔதார்யம் ந பவதிதமாம்] தன்னுடைய பொருள்களை யாசகர்களுக்குக் கொடுப்பது ஔதார்ய மெனப்படுகிறது; வஸ்துதः தேவரீருடைய பொருளாக எதுவுமில்லையே; இதையில் * उदारास्सर्व एवैते * என்று சொன்னபோதே ஸகலமும் அர்த்திகளின் சொத்தாக ஆயிற்றே; ஆகவே, ஸ்வகீயத்ரவ்யஸ்ய பரஸ்வத்வாபாதநரூபமான ஔதார்யத்திற்கு ப்ரஸக்தி யில்லையாயிற்றே.

ஆக இவற்றால் என்ன தேறிற்றென்னில்: எம்பெருமான் எல்லாரையும் தன் உடலாகக் கொண்டிருப்பவன் என்பதும், அடியவர்களின் குற்றங்களைக் காணக் கண்ணிட்டிருப்பவன் என்பதும், யாசகர்களையும் உதாரர்களாகத் திருவுளம்பற்றி யுள்ளான் என்பதும் தெரிவிக்கப்பட்டன. ஆழ்வான் அருளிச்செய்த வரதராஜ ஸ்தவத்திலுள்ள * अनन्याधीनत्वं तव किल जगुः * இத்யாதி ச்லோகத்தின் ப்ரணாலி இங்கு ஸ்மரிக்கத்தக்கது. (103)

गुणतुङ्गतया तव रङ्गपते ! भृशनिम्नमिमं जनमुन्नमय ।
यदपेक्ष्यमपेक्षितुरस्य हि तत्परिपूरणमीशितुरीश्वरता ॥ १०४ ॥

குணதுங்கதயா தவ ரங்கபதே ! ப்ருசநிம்நமிமம் ஜநமுந்நமய,
யதபேக்ஷ்யமபேக்ஷிதுரஸ்யஹி தத்பரிபூரணமீசிதுரீச்வரதா. 104

| | | | |
|---|---|---|---|
| ஹே ரங்கபதே | ஸ்ரீரங்கநாதரே ! | அபேக்ஷிது: | யாசகனாகிய |
| ப்ருசநிம்நம் | மிகவும் பள்ளமான | அஸ்ய | இவ்வடியேனுக்கு |
| இமம் ஜநம் | இவ்வடியேனை | யத் அபேக்ஷ்யம் | எது விருப்பமோ |
| தவ | தேவரீருடைய | தத்பரிபூரணம் ஹி | அதை நிறை வேற்றுவதன்றோ |
| குண துங்கதயா | திருக்குணங்களின் மேட்டினால் | ஈசிது: | ஈச்வரனுக்கு |
| உந்நமய. | நிரவி யருளவேணும்; | ஈச்வரதா | ஈச்வரத்வமாகும். |

* * * [குணதுங்கதயா.] பெரிய பெருமாளே! தேவரீரோ ஸகலவித குணங்க ளாலும் உத்துங்கராயிரா நின்றீர்; அடியேனோ பள்ளமடை. ஒரு மேட்டைக் கொண்டு பள்ளத்தை நிரப்பவேண்டுதலால் தேவரீருடைய திருக்குணங்களாலே அடியேனுடைய தாழ்வைப் போக்கி * தம்மையே யொக்க அருள் செய்யவேணும். அபேக்ஷகனுடைய அபேக்ஷிதங்களைத் தலைக்கட்டித் தந்தருளாதொழியில் தேவரீருடைய ஸர்வேச்வரபாவம் ஓங்குமோ? அது ஓங்கவேண்டில், * நிகரின்றிநின்ற என்நீசதைக்கு நின் அருளின்க ணன்றிப் புகலொன்றுமில்லை, அருட்கும் அஃதேபுகல்-என்று கொள்ளீர் என்றாராயிற்று. இவ்விடத்தில் * निषादानां नेता कपिकुलपतिः कापि शबरी कुचेलः कुब्जा सा व्रजयुवतयो माल्यकृदिति । अमीषां निम्नत्वं वृषगिरिपतेरुच्चतिमपि प्रभूतैः स्रोतोभिः प्रसभमनुकम्पे ! समयसि ॥ * என்கிற தயாசதக ச்லோகம் அநுஸந்தேயம். (104)

त्वं मीनपानीयनयेन कर्मधीभक्तिवैराग्यजुषो बिभर्षि ।
रङ्गेश ! मां पासि मितंपचं यत्पानीयशालं मरुभूषु तत्स्यात् ॥ १०५ ॥

த்வம் மீநபாநீயநயோ கர்மதீபக்திவைராக்யஜுஷோ பிபர்ஷி,
ரங்கேச! மாம் பாஸி மிதம்பசம் யத் பாநீயசாலம் மருபூஷு தத்ஸ்யாத். 105

| | | | |
|---|---|---|---|
| ஹேரங்கேச | ஸ்ரீரங்கநாதரே! | மிதம்பசம் மாம் | அகிஞ்சநனுகிய அடியேனை |
| த்வம் | தேவரீர் | பாஸி யத் | காத்தருள்வீராகில் |
| மீந பாநீய நயோ | மீனுக்குத் தண்ணீர் வார்க்கிறுப் போலே | தத் | அவ்வருள் |
| கர்ம தீ பக்தி வைராக்ய ஜுஷ: பிபர்ஷி | கர்ம ஜ்ஞான பக்தி ப்ரபத்தி யோக நிஷ்டர்களைப் பரிபாலிக்கின்றீர்; | மருபூஷு | பாலைநிலங்களில் |
| | | பாநீய சாலம் ஸ்யாத் | தண்ணீர்ப்பந்தல்வைத்தபடியாகும். |

* * * [த்வம் மீநேத்யாதி.] பெரிய பெருமாளே! கர்ம ஜ்ஞாந பக்தி யோகாதி பரிதர்களை தேவரீர் ரக்ஷித்தருளுகிறீரென்பது வாஸ்தவம். அது மீனுக்குத் தண்ணீர் வார்த்தாப்போலே யிருப்பதொன்று. சக்தர்களை ரக்ஷிப்பதனால் உமக்கு என்ன புகழுண்டு? உண்மையில் அகிஞ்சநனுன அடியேனைக் காத்தருள்வீராகில் அது, பாலை நிலத்திலே தண்ணீர்ப்பந்தல் வைப்பதோடொக்குங்காணீர் என்று ஸ்வரக்ஷ்யத்வா வச்யம்பாவத்தை ஸோபபத்திகமாக விண்ணப்பித்து ஸ்தவத்தையும் தலைக்கட்டினு ராயிற்று. (105)

इति परवादिभयङ्करवंशीयाण्णङ्करार्यसंकलिता ।
श्रीरङ्गराट्स्तवस्य व्याख्या कृपया सतां समाप्तिमगात् ॥

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம்
**அண்ணங்கராசாரியர்**
இயற்றிய
ஸ்ரீரங்கராஜஸ்தவவியாக்கியானம் முற்றுப்பெற்றது.